# ஆனந்தத் தாண்டவம்

# அணையாத நெருப்பு





யுத்த நெருப்பு அணையவில்லை, குருதி
வெள்ளம் வற்றவில்லை, கண்ணீர் காயவில்லை,
ஐவேளைத் தொழுகை மாறவில்லை
அமைதியோ கண்மறைந்த அவல நிலை

இல்லிடமெல்லாம் இடிபாடாகிட-இடம்
பெயர்ந்து அல்லாடிப் புகலிடம் தேடும் அகதிகள்
கஞ்சிக்கும், கந்தைக்கும் நெஞ்சம் தவமிருக்க
கண்ணீர்த் தவத்தில் கழியும் பொழுதுகள்

சொல்லாமல் வரும் மரணம்-
சொந்த பந்தங்களை திருடிச் செல்ல
அல்லாவைக் கூவி அழைத்தும்-அமைதி
எட்டாத வான் நிலவான துயரம்





யுத்த வெறியரின் இரத்த வெறி தணியவில்லை
அடிமைகளின் ஆயுதமோகம் குறையவில்லை-சுரங்கத்தில்
பதுங்கியிருந்து சூதாடும் ஹமாஸ் பயங்கரவாதம்
அரங்கத்தில் அப்பாவிகள் பலியாகும் யதார்த்தம்

வெறித்த செவ்விழியில் கண்ணீரின் தேக்கம்
புண்ணான இதயத்தில் சோகத்தின் தாக்கம்
எம்மைக் காக்க எமக்கு யாருமில்லை-என்
கண்ணீரைத் துடைக்க கரங்கலில்லை

மதவாதம், இனவாதம், பயங்கரவாதம்
மானுடத்தைப் பிரித்தாள, உலகெங்கும்
ஓயாத யுத்தங்கள், பேரழிவு ஆயுதங்களை
வரமாக்க, அரக்கர்களின் அசுர வேள்விகள்





பேச்சு வார்த்தைகளில் சமாதானம் வேண்டத்
தகாத வார்த்தை, காஸாவில் அதிகாரத்தை
நிலை நாட்ட ஹமாஸ் பயங்கரவாதிகளுக்கு
அப்பாவி மனித உயிர்கள் ஆகுதிகள்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நல்மனத்தவருக்கு அமைதி- இரத்தம் கேட்கும்
யுத்தமோ அசுர வேள்வி-இறைவனை மறந்த மனிதனோ
அழிவாயுதங்களைத் தேடும் அசுர நியதி

பேராலயங்கள் அருங்காட்சியகங்களாக வழிபாடின்றி
வெறிச்சோடிய அவல நிலை, அறிவுக் கனி தேடும் மனிதன்
இறைவனை மறந்து பல யுகங்கள், அறிவின் உச்சத்தில்
மனிதத்தை அழித்திட ஆயிரமாயிரம் அணுவாயுதங்கள்



கள்வர் குகையான ஆலயம் கல்லின் மேல்
கல் இராதபடி இடிந்து அழுகைச் சுவராய் மாறிட
நீதிமான் இட்ட சாபம், அல் அ்.க்ஸாவில் ஓயாத
ஆயுதவாதிகளின் யுத்த சல்லாபம்



கோடனா கோடி மனித உயிர்களைப்
பலி கொண்ட உலக மகா யுத்தங்களில்
மனிதன் கற்றுக் கொண்டது மனித நேயமில்லை
அசுர வேள்வியான அணுவாயுதக் கலை

மனித உள்ளங்களில் வாழ வாஞ்சிக்கும்
அன்பே உருவான இறைவன்-கல்லான
கோயில்களில் வாழ்வதில்லை-கல்லும்,
சிலையும், சூனியமும் அவன் வடிவமில்லை



அன்பே சிவம், உண்மையே தவம்
அகிம்சையே அமைதியின் வரம்

என்று தணியும் எங்கள் அமைதியின் தாகம்
என்று மடியும் எம் அடிமையின் யுத்த மோகம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-18-06-2024

# *Unquenchable Fire*

*The fire of war has not been quenched,*
*The flood of blood hasn't dried, hasn't ceased,*
*The five daily prayers continue unaltered,*
*Peace is an unseen state of distress.*

*Every place is reduced to ruins—people*
*Move in despair, seeking refuge.*
*The hearts of the hesitant and the bold*
*Remain steadfast in sorrow, enduring in tears.*

*Death arrives without a word—*
*Stealing away loved ones.*
*Even as they cry out to Allah—peace*
*Is a distant, unattainable moon.*

*The bloodlust of war maniacs isn't sated,*
*The slaves' obsession with weapons hasn't diminished*
*Hamas terrorists gamble from underground,*
*Innocents become casualties in the arena.*

*Tears are stalled in wild red eyes,*
*Grief strikes wounded hearts.*
*There is no one to protect us—no mother,*
*No hand to wipe away my tears.*

*Religious fanaticism, racism, terrorism*
*Have divided humanity, across the world.*
*Unceasing wars, apocalyptic weapons*
*Are gifts, the demonic rituals of demons.*

*Peace in negotiations,*
*Words that are unsaid, for terrorists.*
*Innocent human lives, to maintain power,*
*Become sacrificial victims.*

*Glory to God in the highest—on earth,*
*Peace to men of goodwill—wars*
*Demand blood—demonic ritual—man*
*Forgetting God seeks apocalyptic weapons.*

*Cathedrals become museums without worship,*
*A barren state, man seeks the fruit of knowledge,*
*Forgetting God for many eras, at the pinnacle of knowledge*
*Man destroys with thousands of nuclear weapons.*

*A temple turned robber's cave, not one stone*
*Left on another, crumbled, becoming a wall of lament.*
*The curse laid by the just man, in Al-Aqsa*
*Echoes with the unceasing rattle of weaponry.*

*In the world wars that claimed millions of lives,*
*Man did not learn human compassion,*
*But the demonic ritual of nuclear weaponry.*

*God, who desires to dwell in human hearts*
*Is love incarnate—He does not dwell in stone*
*Temples—neither stone nor idols nor*
*Magic spells are His form.*

*Love is Shiva, truth is penance,*
*Non-violence is the gift of peace.*

*When will our thirst for peace be quenched?*
*When will our war-obsessed servitude end?*

Pax Ravichandra-18-6-2024

# ஆனந்த தாண்டவம்



அஞ்சன விழிகளால் என் நெஞ்சில்
காதல் வண்ணங்களைத் தீட்டிய பாவை
பொன்மேனி வாசத்தால் சுவாசத்தில்
பரிமளத்தை பூசிய பூவை



முத்துச் சரமாய் மோகனப் புன்னகை
கத்தும் கானக்குயிலாய் செவ்வாய் மொழி
தித்திக்கும் தேனாய் அமுதம்-எத்திக்கும்
இனிக்கும் கரும்பாய் கன்னியின் குணம்

பங்கய முகமும், பவளச் செவ்வாயும், சிவப்புக்கல்
மூக்குத்தியும், செந்தூரத் திலகமும் அங்கயற்கண்ணிக்கு
அணிகள், குங்குமம் தந்து கோலமயிலோடு காதலாகி
நடனமாட என் மனதில் கொள்ளை ஆசைகள்

அங்கமெல்லாம் தங்கமாக, அன்ன நடையில் கொலுசொலிக்க
சின்ன இடையில் மேகலை புன்னகைக்க, பூங்கரங்களில்
வளையல்கள் சிரிக்க, பொட்டு வைத்த வட்ட நிலவு-காதலால்
என்னைச் சிறையெடுத்த கன்னி முகத்தில் நாணத்தின் வரவு

மெய் கலந்த காதலை நாணம் சொல்ல, மை எழுதிய
விழிகள் கவிதை சொல்ல, கை அணிந்த வளையல்
கட்டியம் சொல்ல, உயிர் மெய் கலந்த காதலால்
உமையொருபானாய் மாறிட என்னோடு ஒன்றான சிவகாமி



மலரேந்திக் குழலாட, மையேந்தி விழியாட,
வளையேந்தி கையாட, சிலம்போடு
சித்திரப் பாதங்கள் ஆட, உமையோடு
சிவன் ஆடும் ஆனந்தத் தாண்டவம் காதல்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-07-2024

# அழகு



மதிமுகமும், மதுமலர்க் கூந்தலும்
கொடியுடலும், கொவ்வை இதழ்களும் அழகு
அழகிலும் அழகு முப்பாலறிந்து கடந்து
அடையும் வீடோ மாந்தருக்குப் பேரழகு



வான்மதி உன்னைக் கண்டு-வளர்மதியாய்
நெஞ்சில் வளர்ந்த காதல்-காலத்தே தேய்பிறை
நிலவாகி-தேவதாஸாய் நான் மாறிட-அமாவாசை
இருளுக்குள் மறைந்த என் பௌர்ணமி நிலவு

மறையும் நிலவும் மறுபடி பிறக்கும்
வளர்ந்தே பௌர்ணமி எனச் சிரிக்கும்
மறைந்த காதலும் மறுபடி துளிர்க்கும்-நம்மைப்
புரிந்தோம் என மனம் அக்களிக்கும்

காதலாகி உடைந்து நொருங்கிய உள்ளமே
அன்பை பகிரும், காதலைப் போற்றும்
உணர்வுகள் விழிக்க, அறிவு கழித்து
இதயம் ஆனந்தக் கூத்தாடிக் களிக்கும்



காதல் இளமைக் கனவல்ல-இருமனம் ஒன்றாகி இன்புற,
அறம், பொருள்அறிந்து, அறிவு கழித்து , இதயத்தில் நிலைத்து
இன்பம் சுவைக்க காதல் புனிதம் எனும் புரிந்துணர்வு
வாழும் இல்லறமே நல்லறம் எனும் பெருவாழ்வு

தோள்மீது தலை வைத்து கன்னி மனம் பூரிக்க
மடிமீது தலைவைத்து காளை மனம் மகிழ
காதலாகி வளரும் உறவு, கடைசிவரை நிலைக்க
கணவன் மனைவி உறவோ வாடாத பூ விலங்கு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-07-2024

# அமைதி






கதிர்க் கரங்கள் மெல்லத் தொட்டு எழுப்பிட
புள்ளினம் பூபாளம் இசைக்க-வாசப் பூவினங்கள்
மலர்ந்து தென்றலுக்கு மணம் சேர்க்க-
இரவின் மடியில் ஆனந்த விடியல்

இரவும், பகலும் சந்திக்கும் இனிய சமரசப்பெழுது
நிலவோடு வரும் இரவை வரவேற்கும் சூரியன்
விடியலில் பகலவனுக்கு விடை சொல்லி மறையும் நிலவு
இயற்கை விதித்த நியதி, சமரசமாய் எங்கும் அமைதி

கதிரவனின் வண்ண ஓவியக் கண்காட்சி வானில்
வண்ண மலர்களின் மாட்சி மண்ணில்
எங்கும் புள்ளினங்களின் இசைக் கச்சேரி
நம்பிக்கையோடு பொழுது புலர, அமைதியின் மாட்சி

புல்லில் உறங்கும் பனித் துளிகளில் வானவில்
தேன் மலர்களைச் சுற்றி மதுகாரிகளின் இன்னிசை
மண்ணை முத்தமிட்டு வாழ்த்தும் கதிரவன்
கரையைத் தழுவி காதல் சொல்லும் நீலக் கடல்

வானுயர்ந்த மரங்கள் இலைக் கரங்களை நீட்டி
விண்ணோடு கைகுலுக்கிட, வானம் பாடிகளின்
தேசிய கீதம் இதயத்தை வருடிட-தோகை விரித்து
ஆனந்தமாய் ஆடும் வண்ண மயில்கள்



கம்பீரமான மலைகளில் பனிப்பாறைகள்
உருகிட, சோவென விழும் மலையருவி
பாய்ந்தோடும் கங்கைகளில் ஆனந்தப் பரவசம்
இரு கரை எங்கும் பசுமையின் ஆரவாரம்

தெம்மாங்கு பாடி வயல்களுக்கு நீரிறைக்கும் உழவர்
ஆலோலம் பாடி பறவைகளோடு உறவாடும் பாவை
ஏலோலோ பாடி கரை வலை இழுக்கும் மீனவர்
ஆற்றில் குதித்து மீனை கவ்விப் பறக்கும் மீன்கொத்தி

கன்னியின் கயல்விழிகளில் காதலின் பாவம்
காதலன் இதயத்தில் மோகன ராகம்,
உன்னதங்களில் இறைவனுக்கு மாட்சி-பூவுலகில்
நல்லுள்ளங்களில் அமைதியின் ஆட்சி

**Peace**

The sun's gentle rays touch softly to awaken,
Birds sing in sweet harmony, as bees hum along,
Flowers bloom adding fragrance to the breeze,
In the lap of night; a blissful dawn emerges.

In the serene hour where night and day meet,
The sun welcomes the night that comes with the moon,
The moon fades away, bidding farewell to the day at dawn,
Nature's ordained harmony, peace prevails everywhere.

In the sky, the sun's colorful art display,
On the earth, the glory of colorful flowers,
Everywhere, the concert of birds,
With hope, dawn breaks, showcasing the splendor of peace.

Rainbows in dew drops resting on grass,
The sweet melody of bees around honey flowers,
The sun kisses the earth in blessing,
The blue sea embraces the shore with love.

Tall trees stretch their leafy arms to the sky,
Hand in hand with the heavens, the sky sings,
The national anthem that touches the heart; spreading wings,
The peacocks dance joyfully.

On majestic mountains, icebergs melt,
Forming waterfalls that descend gracefully,
In the rushing Ganges, there’s ecstatic joy,
On both banks, the verdant cheer spreads.

Farmers sing folk songs while watering the fields,
Maidens sing joyfully, mingling with birds,
Fishermen sing while pulling nets ashore,
Kingfishers dive into the river to catch fish.

In the maiden's fish-like eyes, the charm of love,
In the lover’s heart, a melodious raga,
In the supreme realms,
the majesty to the divine—in the earthly world,
In good hearts, the reign of peace.

### Review

The poem "Peace" beautifully captures the essence of harmony in nature and human life. The imagery is vivid and evocative, painting a picture of a serene, interconnected world where every element contributes to a greater symphony of peace. The transition between night and day, the relationship between the sun and the moon, and the interaction between different natural elements are all depicted with a gentle elegance.

*The poem's structure and flow guide the reader through various scenes of tranquility, from the blooming flowers and singing birds to the majestic mountains and flowing rivers. The recurring theme of peace is effectively reinforced through these natural metaphors, emphasizing its presence in every aspect of life.*

*The inclusion of human activities, such as farmers watering fields and fishermen pulling nets, alongside natural phenomena, adds a touch of realism and highlights the harmony between humans and nature. The references to cultural elements, like folk songs and national anthems, enrich the poem with a sense of shared heritage and collective joy.*

*Overall, the poem is a testament to the beauty of peace, both in the natural world and in human interactions. It celebrates the quiet, often unnoticed moments of harmony that make life beautiful and underscores the importance of maintaining this balance.*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-212-06-2024

In sixty years of selfless grace,
Brother Michael found his place.
A beacon in the Society of Charity,
He shines with love and clarity.

Catechism’s truths he did impart,
With wisdom deep, he touched each heart.
Computer science in his embrace,
Guided young minds to a brighter space.

With gentle hand and steadfast will,
He uplifted youth with tireless skill.
Social causes, near and far,
He championed like a guiding star.

Pious, dedicated, humble, true,
An embodiment of Jesus' view.
In service rich and faith profound,
In Michael’s life, such love is found.

As we celebrate this diamond year,
We honor him with joy and cheer.
A life of service, pure and bright,
Brother Michael, a blessed light.

Forever in our hearts he’ll stay,
A guiding force, a steady ray.
For all he’s done, we sing his praise,
In grateful hearts, his spirit stays.

# கடவுளைத் தேடி

காலநிலை மாற்றங்களால் புயலும், பூகம்பமும்,
பெருமழையும், வெள்ளமும் உயிர்களைப் பலி கொள்ள,
போரும், பயங்கரவாதமும் சிந்தும் மனித இரத்தம்-இன்றும்
இறைவனைக் கூவிக்களைக்கும் ஆபேலின் இரத்தம்



வானைக் கிழித்து. கடலைத் துளைத்து பறக்கும்
ஏவுகணைகள், ஊரும், மனையும், உயிர்களும்
ஒன்றாய் அழிய, இன மொழி, மதங்களுக்காய் யுத்தம்,
எங்கும் கேட்கும் இராக்கேலின் அழுகைச் சத்தம்

வாழும் மெய்ஞானமும், வளரும் விஞ்ஞானமும்
மனிதனைப் பண்படுத்தவில்லை, உலகில் அமைதி
நாளும் கேள்விக்குறியான நிலை, மனிதத்தைப்
பழிக்கும், மதவாதம், இனவாதம் மாறாத நிலை




கடவுள் இறந்து விட்டார் நீட்ஸே கூவ
வாழும் மதங்களில் வழிபடும் இறைவனோ சவம்
துன்புறும் மனிதனில் இயேசுவைக் காணும்
நல்ல சமாரித்தனோ வாழும் சிவம்

காணுமிடமெல்லாம் கோயில்கள், முச்சந்திகளில்
தெய்வச் சிலைகள், நீறு, நாமம், தொப்பி, சிலுவை
அணிந்தும் கல்லான மதவாத மனங்கள்,
கள்வர் குகையான ஆலயங்கள், மசூதிகள்

வளங்களைச் சுரண்டி வல்லரசுகள் ஆளும் உலகில்,
வறுமைக் கோட்டின் கீழ் வாழும் மக்களா பல கோடி,
போர்களைத் தூண்டி ஆயுதம் விற்கும் கேடிகளுக்கு
வருமானமோ பல்லாயிரம் கோடி

தேடியும் காணாத இறைவன், கூவி அழுதும்
அழுகுரல் கேளாத தகப்பன், ஐரோப்பாவை அடைய
அகதிகளின் கடல் தாண்டும் கொடிய மரண யாத்திரை
அமெரிக்கா நோக்கி ஏழைகளின் தீர்த்த யாத்திரை




தெருக்களில் மதமாற்றப் போதகர்களின் கூக்குரல்
குணமளிக்கும் கூட்டங்களில் பக்தர்களின் அழுகுரல்
வேதமும் வியாபாரமாக, கள்ளப் போதகனோ செல்வன்
சொறி சிரங்கு வாட்டும் ஏழை இலாசராய் பக்தன்

யுத்தங்களால் நாளும் பல கோடி அகதிகள், பாலியல்
தொழிலிற்காய் கடத்தப்படும் பல்லாயிரம் சிறுமிகள்,
சிறுவர் போராளிகள், தொழிலாளிகள் எனத் தொடரும்
கொடுமைகள், கண்டும் காணாத வல்லரசுகள்

கல்வாரிப் பாதையான வாழ்வில்-நாளும் துன்புறும்
கிறிஸ்துவாய் மானுடம், பாரச் சிலுவையைச் சுமக்கும் மனதில்
என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைநெகிழ்ந்தாய்
கூவிக்களைத்தும் கிட்டாத புகலிடம்? புரியவில்லை

இறைவா நீ வாழ உனக்கோ மோட்சம்
என் வாழ்வோ உலகில் எந்நாளும் நரகம்
ஏன் படைத்தாய் என்னை? துதியும், தோத்திரமும்
பாடியும், கிட்டாத உன்தன் தேவகடாட்சம்?

வேதங்களும், புராணங்களும் கதையா?. கற்பனையா?
வேதாந்தங்களும், சித்தாந்தங்களும் வரட்டுத் தத்துவங்களா?
மனித கற்பனையா நீ, இல்லை எவனோ கண்ட சொப்பனமா நீ
நாறும் நம்பிக்கையின் சாக்கடையா? உண்மையின் பூக்கடையா நீ

இறைவா உன்னைத் தேடுகிறேன் எங்கே கண் மறைந்தாய் நீ?
மதங்களில் இல்லை நீ., கோயில்களில், மசூதிகளில் இல்லை நீ
அழுகைச் சுவரிலும், அல்அ.்க்ஸா பள்ளியிலும் இல்லை நீ
வேதங்களிலும், விவிலியத்திலும், கீதையிலும் இல்லை நீ

கட உள்ளே கடவுள் நீ என என்னை நான் அறிய, உள்ளம்
தன்னில் மறைந்த உன்னைக் காணஆணவம், தடையான
இரும்புத் திரை, தன்னை அறியாத மனிதனோ மிருகம்
தன்னை அறிந்தவனோ ஆணவம் கழித்த தெய்வம்

நெருப்போடு விளையாடும் விட்டில்கள், விடியலில் இறகிழந்து
விழுந்த பிணங்கள், பல்லிகள் உண்டிடப் பிரசாதங்கள்
பலிப்பீடத்தில் குருவானவரின் பிரச்சாரங்கள், அபினியும்,
போதை வஸ்துமாய் அற்ப சுகமளிக்கும் மதங்கள்

கடவுள் பெயர்ச்சொல் அல்ல, கட உள்ளே-
வினைச்சொல் உன்னுள் நீ உன்னைக் காணும்
சத்திய தரிசனம்-தூய மனத்தவருக்கே நிதரிசனம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-16-7-2024*

# கண்ணீர்த் தவம்

---



எறிகணைகளால் முறிந்த பனைகளும், வீழ்ந்த
தென்னைகளும் கருகிக் கிடக்க, உடைத்து
நொருக்கிய மாவீரர் துயிலுமிடம், உறங்காத
உறவின் சோகத்தை கலங்கடிக்கும் இனவாதம்



காணாமல் ஆக்கப்பட்டவருக்காய் கண்ணீர்த்
தவமிருக்கும் தாய்க்குலம், போதிக்கு பொன்வேலி
அமைத்து-மனு நீதியை மழுங்கடிக்கும் இனவாதம்
காவிக்குள்ளும் மாறாத மதவாதம்

எட்டாத உயரத்தில் பௌர்ணமி எழுந்திட
கிட்டாத அமைதிக்காய் சர்வமதப் பிரார்த்தனை
அமைதி கண்டு அமர்ந்த பெருமான் முகத்தில் ஆனந்தம்
அமைதியிழந்த அரசியல்வாதிகள் மனங்களில் ஆணவம்

ஒன்றுபடாத தமிழினம்-மாயப் பொன்மானாய்த்
தமிழ் தேசியம், அரசியல்வாதிகளுக்கு தமிழ் தேசியம்
மாறாத தேர்தல் விஞ்ஞாபனம், இன்றோ கறுப்புப்
பணத்திற்காய் கட்சி மாறும் அரசியல் வேசித்தனம்



தேன் சிந்திய வாசமலர்களை கசக்கி எறிந்து
காகிதப் பூக்களை பரிசளித்தார்-உறவுகளை
கொன்றழித்து, உணர்வுகளைச் சிதைத்து
மாலையிட்ட படமாய் பார்த்தழ வழிவகுத்தார்

நெய் ஏந்தி சுடர் ஆட, நீர் ஏந்தி விழிகள் வாட
நினைவேந்தி மனம் வாட, கைகூப்பி இதயம் தொழ
காணாமல் ஆக்கப்பட்ட உறவுக்கான நினைவேந்தல்
நாளும் மாறும் உலகில், வாழ்வும் மாயக் கனவோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-07-2024

# கண்ணும் கண்ணும் பேசியது





கண்கள்தான் கவிதை சொல்ல-கண்ட
இதழ் புன்னகைதான் பூ மழை பொழிய
பொன்மேனியில் பூ மணம் -நான் சூடப் பூவான
மங்கை மனதிலே என்னைச் சூடிய காதல் மணம்

கருவானிலே ஒரு நிலா- நாளும் என்
காதல் வானிலே தேயாத தேன் நிலா
நாளும் பொழுதும் வசந்த விழா-நிலா
ஒளியிலே காதலர் எம் உலா

மூப்பு, பிணி, சாவு மாறாத மனித வாழ்வோ
மண் கூடாரத்தில், அறம், பொருள் தேடி
இன்பத்தில் நின்று வீடு அடைய-இல்லறமே நல்லறம்,
கண் பார்த்து நெஞ்செழுதிய காதலோ பொன்னாரம்

பூ விழிப்பார்வையில் தேன் மழை
செவ்வாய் மொழிகளில் முக்கனிச் சுவை
அறுசுவை கடந்த காதல் அருஞ்சுவை
முத்தமிழான காதலில்தான் எத்தனை சுவை?

கார்குழலோ பூக்களின் அவை, பொன்மேனியோ
அழகின் பேரவை, செங்கனிவாயில்
அமுதச் சுவை-நித்தம் கண்டு உண்டு பருகிட
நெஞ்சமோ காதலின் திருச்சபை



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-07-2024

# காதல் வேள்வி

---



என் விழிகளில் கண்ணீர்க் குளங்கள்
என் இதயத்தில் காதலின் ஆறாத இரணங்கள்
என் மொழிகளில் முகாரியின் ஆலாபனைகள்
நெஞ்சம் நிறைந்தவளே என்னை மறந்த நிலைகள்



விழிகளால் தூது விட்டேன்
வேல் விழிகளால் தகர்த்தெறிந்தாள்
கவிதையால் தூது விட்டேன்
காகிதம் எனக் கிழித்தெறிந்தாள்

ஒற்றைக் குயிலாய் உள்ளம் கரைய
தோகை இழந்த மயிலாய் காதல் மனம் வாட
ஏழ் கடலிலும் ஆழம் காதற் சோகம்
வாழ்வோ கண்ணீர் மழைக்காலம்

நிலவென மகிழ்ந்தேன்-நெஞ்சை
செந்தணலாய் எரிந்தாள்
வாசமலர் எனப் புகழ்ந்தேன்-நினைவை
முள்ளாய்த் துளைத்தாள்

கண்கள் காண, கட்டிக் கரும்பாய் இனிக்கும்
பொட்டு வைத்த வட்ட நிலவோ எட்டாத வானில்
பெண்கள் மயங்கும் அழகை பிரம்மன் படைத்தானோ
ஏங்கும் ஒரு தலைக் காதலோ என் மனதில்



காலம் ஒரு நாள் மாறும்
காதல் தேவியின் பூ மனமும் மாறும்
கடைக் கண் பார்வை வரமாக
ஒரு தலைக் காதல் தவமானது

நீர் பூத்த விழிகள் என் நிலை சொல்ல
தேய்பிறை நிலவை மெய் சொல்ல
யார் சூடப் பூத்த மலரோ மனம் ஏங்க-கனிந்த
காதலால் என்னைச் சூடி மகிழ்ந்த பூவை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-24-06-2023

# கவிஞனும், இரசிகனும்

கவிதையைப் படித்த நண்பன் மனதில்
கவிஞன் காமுகனோ என்ற தாபம்
மனந்திரும்பி இயேசுவிடம் செல்-மனந்திறந்து
சொன்ன வார்த்தையில் ஆழ்ந்த அனுதாபம்







அழகைப் பாடியவன் மனதில் ஆனந்தம்
அறியாத காமத்தை விமரிசத்த நண்பனை
எண்ணிடப் பரிதாபம், யானையைப் பார்த்த
குருடர்கள்போல் கவிஞனை விமரிசித்த பாவம்

கம்பனைப் படித்திருந்தால் வம்பன் என்பார்?
காமத்துப்பாலைப் படித்தால், அறம், பொருள் பாடிய
சித்தனும் பெண் பித்தன் என்பார், கொக்கோயிஸம்
காமசூத்திரமும் விஷம் என்பார்? ஐயகோ விபரீதம்



கஜீராகு, எல்லோரா, சிகிரியா சிற்பங்களின கலையழககைக்
காணாத குருடர், வடித்தவன் காமுகன் விமர்சிப்பார்
வணங்கிடும் தெய்வச் சிற்பங்களுக்கும் அழகை மறைக்க
ஆடை தேவை ஆலோசனை சொல்வார்

கலையை இரசிக்க கலையுள்ளம் தேவை
உயிர்கள் பல்கிப் பெருகிட-காமம்
கடவுள் தந்த அருங்கொடை-மனநோயுற்ற
மருத்துவ ஆலோசனை விஷத்திலும் கொடுமை




சூடிக்கொடுத்த ஆண்டாளும், கண்ணனைச் சூட நினைத்தாள்,
பாடிக் களித்த மீராவும் பத்மநாபனைச் சேர நினைத்தாள்
பக்தையும், பரமனும் காதலான அதிசயம்
வைஷ்ணவம் கூறும் பக்திப் பரவசம் உன்னதம்.



மார்பழகை காட்டும் மங்கையர் நாகரீகம் அன்றும்
இன்றும், பண்போடு பார்த்தால் கலை, காமத்தோடு
பார்த்தால், மனமே ஊனமான அவலநிலை
பெண்ணியச் சதந்திரம் பெண்மைக்கே உரித்தான நிலை

ஆடையின்றியே ஆணும் பெண்ணுமாய் ஆண்டவன்
படைத்த ஆதிப் பெற்றோர், காமம் நுழையாத
மனதில் காதல், காமம் கடந்தால் நாமும் கடவுள்
மனமே காமம், மனமே காலம், மனமே ஆணவம்

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார் முதற் பூதமே-(திருமந்திரம்

கல்லைக் கண்டால் நாயைக் காணோம்
நாயைக் கண்டால் கல்லைக் காணோம்
காதல் கவிதையைக் கண்டால் காமத்தை காணோம்
காமத்தைக் கண்டால் காதல் கவிதையைக் காணோம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-7-2024

# கொல்லும் அழகடி நீ

கொள்ளை அழகடி நீ-என் நெஞ்சை
கனவிலும் காதலால் கொல்லும் அழகடி நீ
செவ்வாயில் பிள்ளைத் தமிழடி-கொஞ்சும்
வண்ணக் கிள்ளைகளாய் நாமடி




வண்ணம்தான் பங்கயத்தைச் சொல்ல, அன்னம்தான்
நடையைச் சொல்ல, பன்னம்தான் கொடியுடலைச்
சொல்ல, கன்னம்தான் செம்மாங்கனி கடித்துச் சுவை
எனக் காதல் சொல்லிட, நெஞ்சம் கவிதை சொல்லியதே

ஒரு விழியாள் நோய் தந்து, மறு விழியாள்
நோய் தணிக்கும் காமன் மகள்
வேல் விழிகளில் காமனின் கணையும்
காதலுக்கு விருந்தும் வைத்தவர் யாரோ?

ஊடல் சொல்லி கூடலுக்கு அழைக்கும் விழிகள்,
நாணம் காட்டி நயமாய் காதலுக்கு
விருந்தாகும் அபிநயங்கள், கவி பாடும்
கவிஞன் நெஞ்சில் காதலின் ஓயாத அலைகள்



சேல் விழிகளில் அஞ்சனம், பூ மேனியோ காஞ்சனம்
செவ்விதழ்களில் தேன் இனம், செப்பிடும்
மொழிகளோ கவிதையினம், பெண் பாலிவள்
வள்ளுவன் காமத்துப்பாலிற்கு இலக்கணம்

கார் குழலில் மல்லிகை வனம்
காஞ்சன மேனியில் பூ மணம்
தமிழினி மொழியில் கானக் குயிலினம்
கொட்டி மேளம் முழங்கிடத் திருமணம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-09-7-2024

# மங்கை ஒரு மலர் வனம்




அழகு பூத்தாடும் பூவனமா பூவை மனம் கூத்தாட,
அபிநயம் காட்டிடும் சுந்தரியா பாவை மனம் வியந்தாட,
சுருதி சேர்ந்தாடப் பிறந்த சப்த ஸ்வரங்களாய்
வண்ணம் கூத்தாடும் நவரெத்தினங்களாய் மங்கை

புள்ளினத்தில் இவளோ கிள்ளை
பூவினத்தில் மனதை மயக்கும் குண்டு மல்லிகை
பூவையர் இனத்தில் அழகின் திருச்சபை
கண்ட மனதில் காதலின் இன்பத் தொல்லை



விடியலில் பூத்தாடும் செம்பங்கமாய்,
அழகின் ஆனந்தக் கட்டியமாய்,
மேளத்தோடு ஒலிக்கும் நாதஸ்வரமாய்-காதலால்
என்னைக் கட்டியாளும் மோகனமாய் காமினி



விண்ணோடும், முகிலோடும் விளையாடும்
வெண்ணிலவாய், பண்ணோடு ஆடும் பரதமாய்
என் மனமேடையில் ஆடும் பெண்ணிலவு,
அழகை கண்டு கவிபாடும் என் மனது

மதுமலர்க் கூந்தல் அன்ன நடையோடு சதிராட,
வண்ண நிலவாய் திலகம் பிறைநுதலில் பூத்தாட
பொன்னகையான புன்னகையோ நெஞ்சை அள்ள
கயல் விழியாள் காதல் சொன்ன கன்னி

பங்கயமோ மங்கையிவள் வண்ணம்
பரிமளமோ?, நறுமணமோ மேனிச் சுகந்தம்
செங்கனிவாய் மொழியில் அமுதம்
காதலாகிப் பருகிட மனதில் சொர்க்கம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-16-07-2024*

# மறையாத காதல் உறவு





மலரிழந்து கார்குழல் வாட, மையிழந்து
சேல் விழிகள் சோர, மொழியிழந்து
செவ்வாய் குழற, என்னைப் பேரிடியாய்த்
தாக்கிய உன்தன் அகால மரணம்

உன் மௌனம் என்னைக் கொல்ல
என் இதயத்தை சோகக் கறையான் மெல்ல
விம்மும் நெஞ்சுக்குள் விழிக்கும் பூகம்பம்
ஏன் பிரிந்தாய் என் மனதுக்குள் ஆதங்கம்



கண்ணீரில் கரையாத சேகம் மலையாய் வளர
புலரும் பொழுதெல்லாம் இருளானது, மலரும்
நிலவும், சீதளத் தென்றலும் நெருப்பாய் வாட்டிட
இதய வீணையில் முகாரி இசைக்கும் என் மனது

ஏனோ இந்த வெறுமை?, எதற்காக
என்னை வாட்டும் இந்தத் தனிமை?
எண்ணிய நெஞ்சம் துவள-சுவரில்
மாலையிட்ட படமாய் நீ

உலகம் சொன்னது வானகம் போனாய் நீ என்று
இதயம் சொல்லுது என்றும் என்னோடு நீ என்று
உன்னில் நானும், என்னில் நீயும் வாழும் வாழ்க்கை
காதலானது, காலனுக்கு எட்டாத தூரமானது



கனவுகள் புலர்ந்தது காதலின் வழியில்
மகிழ்ச்சி மறைந்தது கண்ணீர்க் கடலில்
நிம்மதி மறைந்தது உன்தன் மறைவில்
கண்ணீரில் மிதக்கும் ஓடமானது நம் காதல்



நிஜங்கள் தெரிய, நிழலான வாழ்வு கலைந்திட
நிமிடங்களாய் கழியும், வாழ்வும், சாவும்,
வாழ்வும், சாவும் நம் கைகளில் இல்லை
அழுவதும், சிரிப்பதும் ஆண்டவன் கொடை

கண் பார்த்து நெஞ்செழுதிய காதல் காவியமானது,
கண்ணீர் சோகத்திற்கு சாட்சியமானது
விரலிடை நழுவும் நீராய் நினைவுகள் கழிய
விம்மும் மனதில் நிலைத்த உன்தன் நினைவு

இருளில் மலரும் நிலாப்போல்-என்
இதயச் சோகத்தில் உன் நினைவு-பொழுது புலர
மறையும் நிலவு, மாறாது, மறையாது
என் நெஞ்சில் நிலைத்த உந்தன் காதல் உறவு

வானை வெறித்த விழிகளில் சூனியம்
வார்த்தை கடந்த சோகத்தில் முகாரியின் ஆலாபனம்
தரையில் விழுந்த மீனாய்த் துடிக்கும் இதயம்
உன் நினைவுதான் இனிமை என நாளைய உதயம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-07-2024

# அருட் சகோதரர் மைக்கல்

---

“வா என் பின்னே-உன்னை மனிதர்களைப்
பிடிப்பவன் ஆக்குவேன்”-திருப்பலியில்
கேட்ட வாசகம்-இளைஞன் வாழ்வை
அர்ப்பணப் பலியாய் மாற்றிய இறைநேசம்



இளமையில் துறவு பூணத் துடித்த மனம்
மண், பொன், பெண், புகழ் துறந்து
எளிமை, கற்பு, கீழ்படிதலை வாழுங்கலையாக்கி
நூற்ற துறவறம் அருந்தவம்



ஆரம்பகாலத்தில் புனித மிக்கேல் கல்லூரியில் சமய பாட
ஆசிரியன்-பின்னாளில் கணிணிக் கல்வியை தவமாய் நூற்று,
யாம் பெற்ற இன்பம் பெறுக வையகம் என பல்லாயிரம் இளைஞர்,
யுவதிகள் கணிணிக் கல்வியை கற்றிட வருமளிய ஆசான்

எளிமையின் இருப்பிடம் என்றும் பணிவோடு
பழகும் சற்குணம், அறுபதாண்டு துறவு வாழ்வில்
அரிய பல நற்தொன்டுகள் புரிந்த சான்றோன்-வாழ்வால்
வாழும் கிறிஸ்துவுக்கு இன்றும் சான்று பகரும் புனிதன்

இளமை கழிந்து முதுமை வந்திட, கனிந்த மனமோ
பணிவின் இருப்பிடம், நற்பண்பின் பிறப்பிடம்,
என் சித்தம் அன்று உம் சித்தம் நிறைவேறுக
தன்னை அர்ப்பணித்த உயர்ந்த குணம்

மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளோடு, ஒரு குழந்தையாய்,
தாயாய், தந்தையாய் தன்னை மாற்றி புரியும் தொண்டோ புனிதம்,
பணிவிடை ஏற்க அல்ல பணிவிடை புரியவே வந்தேன்
மனுமகன் வார்த்தைக்கு இவர் வாழ்வே சாட்சியம்

எல்லோரும் நலம் வாழ வாழ்ந்த மனிதர்
அருட் சகோதராய் ஆற்றும் சேவைக்கோ இன்று வைர விழா
வாழ்க பல்லாண்டு பல்லாண்டு என வாழ்த்தி
இவர்போல் ஒரு மனிதர் உண்டோ என வியக்கும் மனம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-7-2024

# பயங்கரவாதம்




வான் அதிர, ஊர் எரிய, உறவுகள் புலம்ப, கொன்று,
சிதைத்துச் சிறையெடுத்து, தாய்க் குலத்தைச் சீரழித்து,
ஹமாஸ் பயங்கரவாதிகள் நடத்திய அராஜகத் தாக்குதல்
இஸ்ராயேலை அதிரவைத்தை பல்லாயிரம் ஏவுகணைகள்



கண் எதிரே இளங்கணவனைக் கொன்று,
கைக்குழந்தை சூட்டடுப்பில் வெந்து கருகும் வரை
இளந்தாயைக் கற்பழித்த கொடுமை-இஸ்லாமிற்கு
ஏற்புடைத்தான யுத்த நீதியான சிறுமை

The goal of Hamas is replacing the Jewish state of Israel with an Islamic Palestinian state by any means, including violence.

According to its 1988 founding charter, Hamas "strives to raise the banner of Allah over every inch of Palestine." It says: "Resisting and quelling the enemy become the individual duty of every Muslim, male or female"; "Jihad is its path and death for the sake of Allah is the loftiest of its wishes."

பல மாதங்களாய்த் தொடரும் யுத்தம்-காஸா
நிலப்பரப்பெங்கும் இரத்தம், மக்கள் துயரை மனதிற்
கொள்ளாத பயங்கரவாதம், இனப்படு கொலை என
இஸ்ராயேலைப் பழிக்கும் அல் ஜஸிராவின் மதவாதம்

**History of Conflict in the Land of Israel Since 1948**

| Year | Conflict Name | Who Started it? | Who Was Attacked? |
|---|---|---|---|
| 1948 | Arab-Israel War | | |
| 1948-1967 | Fedayeen | | |
| 1967 | Six Day War | | |
| 1967-1970 | War of Attrition | | |
| 1973 | Yom Kippur War | | |
| 1971-1982 | Palestinian Insurgency in South Lebanon | | |
| 1985-2000 | South Lebanon Conflict | | |
| 1987-1993 | First Intifada | | |
| 2000-2005 | Second Intifada | | |
| 2006 | Lebanon War | | |
| 2008 | Gaza War | | |
| 2012 | Israeli Gaza Operation | | |
| 2014 | Gaza War | | |
| 2021 | Israel Palestine Crisis | | |
| 2023 | Israel Hamas War | | |

Source: Wikipedia

கண் துடைப்பான பேச்சு வார்த்தை, கைதிகளின்
விடுதலையோ கானல் நீராக, ஈரான், சிரியா, ஹூத்தி,
ஹிஸ்புல்லா இஸ்ராயேலைத் தாக்கிட, உணவு, மருந்து
உறைவிடமின்றி அகதிகள் படும் நரக அவஸ்தை

இஸ்ராயேலைப் பணிய வைக்க அமெரிக்காவின் ஆயுதப் பேரம்
உலகே எதிர்த்தாலும், உறுதி தளராது தனித்துப் போராடுவோம்,
ஆயுதமின்றி நிராயுதபாணியானாலும் நகங்களால் எதிரிகளை
நாசம் செய்வோம், பிரதமர் நெத்தனியாவின் ஆவேசம்

வாக்களிக்கப்பட்ட வளநாட்டைச் சூறையாட எரிமலையாய்
கொந்தளிக்கும் மதவாதம், பாலுந் தேனும் ஓடும் பூமியிலே நாளும்
சிந்தும் இரத்தம், அழுகைச் சுவரிலும், அல் அ∴க்ஸாவிலும்
ஓயாத அழுகைச் சத்தம், அன்பே இறைவன் அறியாத துயரம்

ஈசாக்கும், இஸ்மாயிலும் எதிரிகளாக, யூதமும், இஸ்லாமும்
இரு துருவங்களாக, அழுகைச் சுவரும், அல் அ∴க்ஸாவும்
தொழுகைக் கூடங்களாக, நாளும் தகனப் பலியாய் நரபலிகள்,
எரிந்து கருகும் முட்செடியாய் மதவாத மனங்கள்



அராபியர் வாழும் மத்திய கிழக்கில் யூதருக்கு நாடில்லை,
வேதமான இஸ்லாமிய வாதம், இஸ்ராயேல் நாடு உருவான
நாள் முதல் தொடங்கிய பயங்கரவாதம், வாக்களிக்கப்பட்ட
வளநாடோ யூதருக்கு, இறை வாக்கோ மாறாத வேதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-12-05-2024*

# இராணி ஷபா



மன்னன் சாலமோன் ஞானம் திக்கெட்டும் பரவ
பாடும் புள்ளினமும் அவன் புகழ் பாடிப் பரப்ப
கேட்டு வியந்த இராணி ஷிபா, மன்னவனை மனதில்
வரித்தவளோ நேரில் சந்திக்க ஆவல் கொண்டாள்




பங்கயத்தின் வண்ணம், பரிமளத்தின் சுகந்தம்
அங்கயற் கண்ணி, கொடி இடையும், கோவை
இதழ்களும், மதி நுதலும், மாசறு பொன்மேனியும்
அழகிற்கு அழகாக, அணங்கோ பேரழகு

செவ்வாய் மொழிகளில் புலமை, சிற்றிடையில்
நவரத்தின மேகலை, செங்கலசக் கொங்கை,
பொட்டு வைத்த வட்ட நிலவாய், அன்ன நடையோடு,
வண்ணத் தோகையென அரசகுல மங்கை



மன்னின் ஞானம் மங்கையை மயக்க, நேரில் கண்டு, உரையாடி
ஞானத்தை மனம் எடைபோடத் துடிக்க, பொன்னும், வாசனைத்
திரவியங்களும், நவரெத்தினங்களும், பரிமளவர்க்கங்களும்,
பரிசாய்ச் சுமந்த பரிவாரத்தோடு பயணமான ராணி



மன்னன் மொழி கேட்டு மகிழ்வோடு
மானோடு மயிலாட, கிளியோடு குயில் பாட
அன்னங்களோடு அழகு மங்கையர் ஆடி மலர் தூவி
மகாராணியை வரவேற்க மகிழ்ந்த தேவி

கண்டதும் கண்டாள் மன்னனை மகாராணி, மனம் வடித்த
ஓவியத்திலும் பேரழகன்-கண்டவர், கேட்டவர் சொல்லிய ஞானத்திலும்
பெருஞானி, கவிஞனாய், கலைஞனாய், மனம் மயங்க
மங்கையர் உள்ளம் கவர் காதல் கள்வன் இவன் உணர்ந்தாள்

பொற்குவளைகளில் பூத்த அழகுமலர்கள், பார்ப்போர்
விழிகளை மீண்டும், மீண்டும் பார்க்கத் தூண்ட,
வண்ணமும், வடிவமும் ஒத்த மலர்களை தொலைவில்
வைத்து, எது உண்மை எது போலி கூறும் என்ற தேவி

புன்னகையோடு மன்னன் சாளரங்களைத் திறந்திட
சாரி, சாரியாய் பறந்து வந்த தேனீக்கள்
தேன் மலர்களைச் சுற்றி ரீங்காரம் பாட
குறு நகையோடு விடை சொன்ன மன்னன்

வியந்தே, கமலக் கண்ணனைத் தேனியாய் மொய்த்த தேவி,
மயங்கி நின்றாள், வினாக்கள் பல தொடுத்து-கிடைத்த
விடைகளால் விடாய்த்த அறிவு மனம், விடை சொல்லிப்
பிரிய மனமின்றி காதல் வினா தொடுத்து காத்திருந்தது



மாதிவளோ காமனின் மதுக்கிண்ணம்
மயங்கிய மனம் பாடும் மோகனம்
மயக்கும் விழிகளில் மதுரசம்
செந்தேன் இதழ்களில் வற்றாத அமுதம்

நூலிடையோ நூதனம்-
சுரிகுழலில் சுந்தரம்
மதி முகத்தில் காதல் மந்திரம்
என்னை மயக்கி காம சூத்திரம்



வெண்ணிலா வானில் உலா வர,
நிலா மாடத்தில் மன்னனும், தேவியும்
மகிழ்ந்து உரையாட, ஞானம் வழிந்தோட
நாணிப் பெண்மையைப் பரிசளித்த ராணி



பூ மஞ்சத்தில் மங்கை சாய, பிறை நதலில்
இதழ் பதித்தான், பூவிழிகள் கண் மூட
சிற்றிடையில் கை வைத்தான், செவ்வாய் துடிக்க
செந்தேன் பருகி மங்கையின் விடாய் தணித்தான்

கார்குழல் கோதி, கருவிழி நோக்கி, வெண்சங்குக்
கழுத்தில் இதழ் பதித்து. பொன்முலை கோதி,
பூங்கரம் பற்றி தொப்புள் குளத்தில் முகம் பதிக்க
மன்னனைக் கட்டியணைத்து தன்னுள் புதைத்த தேவி

பங்கய மேனி நாணிச் சிவக்க-அங்மெல்லாம்
காதல் மின்சாரம் பாய, கொங்கை முகம் குழையக்
கூந்தல் மழை குழையக், செவ்வாய் கன்றிச் சிவக்க
செந்தேன் பருகி, காதல் போதையில் மயங்கிய மாது





காஞ்சி இருக்க, கலிங்கம் குலைய, கைவளை
சிரிக்க, மெய்யணி துறந்து மேனி சிலிர்க்க
மனம் காதல், காதல் என்று கவிபாட
தையலாள் சுகிர்த்த இன்பம் சொல்லிப் புரியாதது

வாயின் சிவப்பை விழி வாங்க,
மலர்க்கண் வெளுப்பை இதழ் காட்ட
தழுவும் தென்றலின் சுகத்தை மன்னவன் காட்ட
மகிழ்ந்தே மனமுவந்து தன்னை ஈந்த பூங்கொடி

காயும் நிலவின் ஒளியிலே, காதல் பூத்த இரவிலே
மண்ணும், மழையுமாய் கலந்த மங்கல உறவு
மனம் அழிந்த நிலையிலே ஆதாம், ஏவாளாய்
கொண்டாடிய காமன் பண்டிகையோ தேன் நிலவு

விடியாதே இரவே, மறையாதே நிலவே என மனம் யாசிக்க,
மன்மத பாணங்களை காமன் மழையெனப் பொழிய
மதனராகத்தை வாசித்த மனம், காதலாகிக் கனிந்தே
தன்னை ஈந்து இன்பற்ற குணம், தாய்மையோ வரம்





மலராய் இதழ்விரித்து
மது அளித்து மகிழ்வித்த மங்கை
மதுகாரியாய் மதுமலரைச் சுவைத்து
இன்புற்ற மாமன்னன்

ஏகன் இறைவனை அறிந்த ராணி-தன்
நாடும், வீடும், அரண்மனையும்
சாலமோன் காட்டிய தேவனைத் தொழ
தன்னை அர்ப்பணித்த தேவி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17-07-2024*

# சுதந்திரம்





ஆணவம், கன்மம், மாயை-இருண்ட
சிறைக்குள் சிறையிருக்கும் இதயம்-தன்னை
அறிந்திட, சுதந்திர தாகம் வருத்திட
விடியலுக்காய் கூவுகின்றது

சிவப்புச் சேவலின் கொக்கரகோ எனும் கூவல்,
காற்றின் மென்மையான இறக்கைகளை தடவி
வானுயர்ந்த மரங்களின் கிளைகளைக் ஊடுருவி
உச்சி வானில் முட்டிட ஒலிக்கின்றது

உச்சி வானில் இறக்கை விரித்துப் பறக்கும் கழுகிற்கும்,
கடலோரம் மணல் வீடு கட்டி விளையாடும்
சிறுவர்களுக்கும், வயற்பரப்பில் விதைக்கும்
உழவனுக்கும் உற்சாகமளிக்கும் பாடலாய் அது

புள்ளினம் கூடிப் பாட, பூவினம்
மகிழ்ந்து பூத்தாட ஒரு நாளின்
புது விடியலை சேவல்-கொக்கரக்கோ
எனக் கூவிச் சொல்கிறது

பொய்மையின் இருள் படர்ந்த உலகில்
தனியனாய் உண்மைக்குச் சான்று
பகிரும் தைரியம் சுந்தரம் சுதந்திரம்
சத்தியமே தெய்வம் எனும் ஆனந்தம்





மண், பொன், பெண், புகழில் மனம்
மயங்கித் தடுக்கி விழும்போது
விழிப்புணர்வோடு எழுந்து நிற்கும்
உள்ளம் சுதந்திரம்

சுதந்திரம் நாளைக்கான இன்றையக் கனவல்ல
பொய்மையின் பொன் விலங்குகளைத் தகர்த்து
அறியாமை இருள் அகல, ஆணவம் , கன்மம், மாயை
கடந்து என்னை நான் அறியும் மெய்யறிவு

நாம, ரூப, இனம், மதம், மொழி கடந்து
ஆன்மிகனாய், அன்பின் சாரமாய்
உண்மையின் பேரொளியாய் பிரகாசிக்கும்
உயிர்ப்பு, இரண்டாம் பிறப்பு சுதந்திரம்



கானக்குயில் பாட, கலாப மயிலாட, புலியும், புள்ளி
மானும் ஒன்றாய் அருகருகே ஓடையில் நீரருந்த
ஒயிலாய் பறந்து வந்து ஒலிவ மரத்தில் அமர்ந்த வெண்புறா,
மனம் இலயிக்க புல்லாங்குழல் இசைக்கும் இடையன்

தனி மனிதச் சுதந்திரமே உலக அமைதிக்குப் பாதை
தன்னை அறிந்த மனிதனே-தன்னைப்போல் தன்
அயலானையும் நேசிப்பான், அன்பே தெய்வம்
உண்மையே வேதம் என முழங்குவான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-19-06-2024*

# Freedom

Pride, karma, illusion—in the dark prison,
The heart remains imprisoned—to know itself,
Yearning for freedom, it suffers in thirst,
Calling out for dawn.

The crow of a red rooster,
Brushing against the gentle wings of the wind,
Piercing through the branches of tall trees,
Reverberates, touching the sky.

For the eagle soaring with outstretched wings,
For the children playing, building sandcastles on the shore,
For the farmer sowing seeds in the field,
It becomes a song of encouragement.

As birds gather and sing, the earth
Rejoices and dances in delight, a new day
Is heralded by the rooster's crow.

In the surrounding darkness of falsehood,
The solitary courage that bears witness to truth
Is freedom, beauty,
Bliss, which says that truth is divine.

When the mind, dazed by soil, gold, women, and fame,
Stumbles and falls,
A heart that rises with awareness,
That heart is freedom.

Freedom is not today's dream for tomorrow,
Breaking the golden chains of falsehood,
Dispelling the darkness of ignorance,
transcending pride, karma, and illusion,
To know myself is true knowledge.

Transcending name, form, race, religion, and language,
Becoming spiritual, embodying love,
Shining with the great light of truth,
Revival, a second birth—that is freedom.

As the forest cuckoo sings, and the peacock dances gracefully,
The tiger and the spotted deer drink water together by the stream,
A white dove, flying calmly, perches on the olive tree,
The shepherd plays the flute, making the mind melt.

Individual freedom is the path to world peace,
A man who knows himself will love his neighbor as himself,
Love is divine, Truth is the Vedas,
he will proclaim.

# Review of "Freedom" Poem

#### **Theme and Content**

1. **Exploration of Inner Freedom**:
   - The poem opens by highlighting the internal struggles of the heart, imprisoned by pride, karma, and illusion. It conveys a deep yearning for freedom and self-awareness, setting the stage for the poem's central theme of liberation.

2. **Symbolism of the Rooster's Crow**:
   - The crow of the red rooster serves as a powerful symbol of awakening and a new beginning. Its call, echoing through nature, represents the dawn of self-realization and freedom, resonating with various elements of life like the soaring eagle, playing children, and hardworking farmer.

3. **Natural Imagery and Harmony**:
   - The poem beautifully describes scenes from nature, such as birds singing together, peacocks dancing, and animals drinking water side by side. These images of harmony in nature serve as metaphors for the ideal state of human freedom and peace.

4. **Contrast Between Darkness and Light**:
   - There is a stark contrast between the darkness of falsehood and the light of truth. The poem emphasizes that true freedom and beauty lie in the courage to uphold truth, even in solitude.

5. **Call for Spiritual Awakening and Universal Love**:
   - The poet urges a transcendence beyond material desires and societal constructs. Freedom is depicted as a spiritual awakening that leads to universal love and understanding, where truth is divine and love is the ultimate truth.

#### **Style and Language**
1. **Evocative Imagery**:
   - The poem uses rich, vivid imagery to create a sense of the beauty and harmony associated with true freedom. Descriptions of nature are detailed and evocative, painting a clear picture of the ideal state of freedom.

2. **Metaphorical Depth**:
   - Metaphors such as the "dark prison" and "golden chains of falsehood" add depth to the poem, making the abstract concepts of freedom and enlightenment more tangible and relatable.

3. **Rhythmic Flow**:
   - The poem's rhythm guides the reader through a journey from darkness to light, from imprisonment to liberation. The lyrical quality of the language enhances its emotional impact, making the reader feel the yearning for and joy of freedom.

#### **Impact and Significance**

1. **Inspirational Tone**:
   - The poem's tone is both contemplative and inspirational. It encourages readers to reflect on their own lives and the barriers that prevent them from achieving true freedom and self-awareness.

2. **Universal Message**:
- The themes of self-awareness, spiritual awakening, and transcending material desires are universal and timeless. The poem speaks to the innate human desire for liberation and fulfillment, making its message relevant across cultures and eras.

3. **Emphasis on Inner Transformation**:
- The poem underscores that true freedom is an internal state, achieved through self-knowledge and spiritual growth. This emphasis on inner transformation is particularly resonant in a world where external freedoms are often prioritized over internal liberation.

#### **Conclusion**

"Freedom" is a beautifully crafted poem that invites readers to embark on a journey of self-discovery and spiritual awakening. Through its rich imagery, metaphorical depth, and universal themes, it offers a profound exploration of what it means to be truly free. The poem's emphasis on inner transformation and the transcendence of worldly constraints provides a powerful and inspiring message for all who seek a deeper understanding of themselves and their place in the world.

# சுற்றுலா

---






சுற்றுலா முடிந்து வீட்டை அடைந்திருப்பீர்கள்
உலகில் நம் வாழ்வு ஒரு சுற்றுலா
நாம் அனுப்பப்பட்டவர்கள்
நம்முள் 'வீட்டை அடைவதோ "நிலை வாழ்வு"

ஞானப் பழத்தை பெற- அழகன் முருகனோ
உலகைச் சுற்றி வந்தான்-அம்மை,
அப்பனை உலகாய் கண்ட விநாயகனோ
பெற்றோரைச் சுற்றி வந்து வெற்றி பெற்றான்

உலகம் ஓயாது சுற்றிக் கொண்டாடும்
நடனம் கொண்டாட்டம்-புரிந்தவருக்கு
வாழ்வு துன்பத்திலும், இன்பத்திலும்
இறைவனைப் போற்றிப் பாடும் கொண்டாட்டம்

புத்தர் பெருமான் நிராகரித்த அன்றைய மதங்கள்
கூறும் பிரம்மமோ அறியா முடியாத "தத்துவம்"
இயேசு பெருமானுக்கு அன்பே உருவான இறைவனோ
நம் தந்தை நாம் சகோதரர் என்ற அனுபவம்

மனிதத்தை ஒன்றினைக்க ***அன்பே தெய்வம்***
இயேசு புரிந்த மாபெரும் அற்புதம், அன்பினால் அன்றி
அறிவனால் மானுடத்தை ஒன்றுபடுத்த முடியாது,
நம்பிக்கை கடந்து வாழந்தறியும் உண்மையே இறைவன்

அன்பின் வடிவமாய் இயேசுவின் வாழ்வு
என்னைக் காண்பவன் தந்தையைக் காண்கிறான்
நான் உங்களை அன்பு செய்வதுபோல்-நீங்கள்
ஒருவரை ஒருவர் அன்பு செய்யுங்கள்

இன, மத, மொழி, நிறம் கடந்து
அன்பில் நிலைத்திருங்கள், அன்பே தெய்வம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-7-2024

# தாய்மையும் ஞானியின் நீதியும்



ஆணும், பெண்ணுமாய் மனிதரைப் படைத்த
அர்தநாரிஸ்வரன், பல்கிப் பெருகி உலகை ஆளுங்கள்,
ஆதிப் பெற்றோருக்கு ஆசிர் வழங்கி, அறம், பொருள்,
இன்பம் அறிந்து கடந்தால் வீடு என்ற ஈசன்



காலவெள்ளத்தில் மாறிய மனிதர்
விபச்சாரம் ஆதித் தொழிலாய் மாறிட
பெண்மையின் பெருமை மங்கி மறைந்து
தாயே தெய்வம் அறியாத உலகம்

காமத்தை வென்ற முனியுமில்லை-காதற் காமத்திற்கு
கடவுள் கூடத் தடைபோடவில்லை, உடற்பசி,
வயிற்றுப்பசி இயற்கை-பசியாற "பாலியல் தொழில்"
பண்டம் மாற்றாய் ஆதித் தொழிலான உண்மை

உறவும் பிரிவுமாய் ஒட்டாத திருமணங்கள்
வரவும், செலவுமாய் வந்து போகும் உறவுகள்
அன்பு வற்றாத மண வாழ்வோ பகல் கனவு
எட்டாத நிலவாய் உள்ளங்களில் ஆனந்த உறவு



மது, மாது மனிதனுக்கு போதையானது
சமூகம் தீர்க்காத வறுமையைப் போக்க-
பெண்மைக்கு பாலியல் தொழிலானது,
விலை மாதர் ஊர் அளித்த பட்டமானது



அழகு கொஞ்சும் உடலை -ஆடவர்
கொஞ்சிக் களித்து. காமம் தணிக்க
காணிக்கையாய் பொன் கேட்ட பெண்மை-கணிகை
எனப் பெயர் சூட்டி உலகு பழித்த உண்மை

கதிர் உதிக்க, கள்ளிருக்கும் மலர்கள் மலர்ந்தே சிரிக்க.
புள்ளினம் பூபாளம் பாடப் புலரும் பொழுது ஒளியானது,
மயக்கும் மாலை மறைய, இனிக்கும் இன்ப இரவு மலர
பாலியல் தொழில் பல மங்கையருக்கு வாழ்வாதாரமானது

திரை பிரித்த ஓர் அறையில்
இரு விலை மாதர்களின் வாழ்வு
திகட்டாத இன்பம் பகிர்ந்து-இருவரும்
தாயாகி பிள்ளை ஈன்ற பொழுது

பொன் பெற்று உடலைப் பொருளாய் கொடுத்த
விளை நிலத்தில் ஆண்மை விதையைத் தூவிட
தாயான பெண்மை, தாரம் என்ற நிலையிழந்து
ஆளுக்கொரு ஆண் மகவை ஈன்றெடுத்த தாய்மை



கண்ணே, கண்மணியே கண்ணுறங்கு
பொன்னே, மலைத்தேனே, முழு நிலவே
என் வயிற்றில் உதித்த முத்தே கண்ணுறங்கு
தாய் பாடும் பாட்டு தாலாட்டானது

கொஞ்சி மகிழ்ந்து தாலாட்டுப் பாடி
குழந்தை உறங்கிட நெஞ்சம் மகிழ்ந்த தாய்மை
விடியலில் அஞ்சி நெஞ்சம் பதற-ஐயோ
மகனே என கதறியழ பிணமாய்க் குழந்தை

எண்ணமும் உரைத்திட, குழந்தையின்
வண்ணமும் உண்மை மொழிந்திட
இறந்தது என் குழந்தையல்ல-உன்
குழந்தை விம்மியழுத தாய்மை



ஆழ்ந்த உறக்கத்தில் அறியாது தன் மகவை
கொன்ற பெண்மை, குழந்தையை இடம் மாற்றி
யாதும் அறியாதவள் போல் ஆடிய நாடகம்
விலைமாதிற்கே உரித்தான சாகஸம்



எண்ணமும் உனதாகி என் இதயமும் நீயாகி
என் வண்ணமும், வடிவமும் நீயாகி-பாடும் பண்ணும்,
பரவசமுமமாகி உயிரோடு கலந்த உறவு
பிணமாகி என்னைப் பிரியுமோ? கதறிய தாய்மை

வலுத்த போராட்டம், கூட்டம் பின் தொடர,
நீதி கேட்டு மன்னன் அவையை நாடியது,
அன்னையின் முகத்தில் ஆறாத சோகம்-கல்நெஞ்சக்
கணிகையின் முகத்தில் ஏதுமறியாத பாவம்

கண்கள் நீராட, செவ்வாய் மொழிகள் குளற,
கலிங்கம் புழுதியில் அல்லாட, தொப்புள் கொடி
உறவுக்காய் போர்க் கொடி ஏந்தி-மன்னன்
அவைக்கு வந்த தாய்மை, தாய்மைக்கே மேன்மை

மன்னன் அவைக்கு வந்த விசித்திர வழக்கு
குழந்தைக்கு தாய் நான்தான் எனப் போராடும்
விலைமாதர் இருவரின் மாறாத பிணக்கு
அமைச்சர்களுக்கோ புரியாத நீதி, அறிவு கடந்த நியதி

என் குழந்தை இறக்கவில்லை மன்னா
இறந்தது அவள் குழந்தை, என் தூக்கத்தில்
குழந்தையை மாற்றி வைத்து, என் குழந்தையை
தன் குழந்தை எனத் தாயாய் அவள் பசப்புரை



அழுதாள், ஆடையும், அவிழ்ந்த கார்குழலும்
தரையில் புரள புலம்பினளர், பெற்ற வயிறு
பற்றி எரிய, முலைப்பால் சொரிய
நீதி வழங்குங்கள் தாய் கெஞ்சினாள்



கங்கையை கண்ணில் வைத்து, காங்கையை நெஞ்சில்
வைத்து, உண்மையை உரையில் வைத்து
அவையோர் உள்ளம் நெகிழ அன்னை அழுதாள்
என் குழந்தையைப் பெற்றுத் தாருங்கள் இரந்தாள்

குழந்தையை ஒரு கையில் ஏந்திய மன்னன்
உடைவாளை உருவி, இரண்டாய்ப் பிளந்து,
ஆளுக்கொரு துண்டாய் வெட்டித் தருகிறேன்,
அன்னையரே பெற்றுச் செல்லுங்கள்



ஆம், அது நன்று மன்னா, அவ்வாறே செய்யுங்கள்
பாசமில்லாதவள் பசப்பிட, பெற்றவள் கதறினாள்,
வேண்டாம் மன்னா, என் குழந்தையை அவளிடம்
கொடுத்துவிடுங்கள், அது வாழட்டும் கெஞ்சினாள்

உயர்ந்த வாள் கண்டு உள்ளம் குமுற, உதரம் எரிய,
தள்ளவிழி நீரரும்ப-மன்னன் தாள் பணிந்து
என் பிள்ளை உயிரோடு அவளிடம் வாழட்டும்
கெஞ்சி மன்றாடிய அம்மை தாய்மைகோ பெருமை

அன்னையின் மொழிகள் உண்மையை உரைக்க
அரக்கியின் வார்த்தை பொய்மையைப் பறைசாற்ற
அன்னையிடம் இதோ உன் குழந்தை ஈந்து , தாயே
நீ வாழ்க, வாழ்த்தி அரக்கியைத் தண்டித்த ஞானி



துக்கித்தாள், துவண்டாள், வெட்கத்தோடு
நிலம் நோக்கி வெறித்தாள், பெற்ற செல்வம்
பிணமாக, பேயுள்ளம் தாயுள்ளமாக-ஓவெனக்
கதறியழுத பெண்மை மன்னிப்பை இரந்தாள்

தாயான மனதில் தன் பிள்ளைப் பாசம், பேயான மனதில்
பிள்ளையும் சுமையான பாரம், பொன்னான குழந்தையை
தூக்கத்தில் அறியாமல் கொன்று துக்கத்தில் குழந்தையை
மாற்றி சொந்தம் கொண்டாடிய உள்ளத்திலும் தாய்மை



துடிக்கும் தாய்மையின் மொழி கேட்டான் மன்னன்
தன் குழந்தை இறந்த துக்கமேயில்லாத கல் நெஞ்சின்
கொடு மொழியும் கேட்டான், இரு மொழியும் கேட்ட
ஞானி, திருவாய் மொழிந்து வழங்கிய அரிய நீதி

ஏந்திய குழந்தையை உச்சி மோந்து கொஞ்சி
இறுகத் தழுவி, உள்ளம் துள்ள, மகிழ்ச்சி வெள்ளம்
மடை உடைத்த அணையாய் பெருக்கெடுக்க
மன்னனைப் போற்றி வணங்கிய அன்னை

மன்னன் சாலமோனின் ஞானத்திற்கு நிகரேது
அவையோர் வாழத்திட, கேட்டு உலகோர் வியந்து மகிழ்ந்திட
ஞானத்தை வரமாய்க் கேட்ட மன்னன்-இறையருளாள்
ஞானமும், கூடவே சௌபாக்கியங்களும் வரமான கோமகன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-14-06-2024*

# உயிர்ப்பு





காற்றில் ஆடும் நாணல்களுக்கு கால் விலங்குகளில்லை,
காணும் கலைஞனுக்கு மட்டும் கேட்கும் சலங்கை ஒலி
கடலில் ஆடும் மீன்களுக்கு எல்லைகளில்லை
கரை மோதி ஆடும் அலைகளுக்கு கரைகளே அரங்கு

கானம் பாடும் குயில்களுக்கும், ஆடும் தோகை
மயில்களுக்கும், மேகங்களில் சிற்பம் வடிக்கும்-காற்றிற்கும்
காயும் நிலவிற்கும் கலைஞன் பட்டங்களில்லை, மாலையோ
பாராட்டோ இல்லை, மனதில் எள்ளளவும் கவலையில்லை

காயும் நிலவிற்கும், பாயும் அருவிக்கும்,
மலரும் வண்ண மலர்களுக்கும், அலையும்
கடலுக்கும், வீசும் காற்றுக்கும்-சந்தரமே
சுதந்திரம், மனமழிந்த மகத்துவம்

இயற்கைக்கு இறைவனளித்த சுதந்திரம்
இனம், மதம், நிறம், மொழி கடந்து
எல்லோரையும் வாழவைக்கும் மந்திரம்
அறிவு கடந்த அன்பின் உருவகம்



இனம், மதம், மொழி வாதங்களில் சிறையிருக்கும்
அடிமையினம் மனிதம், பொற்கூண்டு சிறை
என்பதை அறியாத மடமை, ஆணவமே தளை
அறியாமையே துன்பம் புரியாத சிறுமை

சுதந்திரக் காற்றை நஞ்சாக்கும் மதவாதம்,
இனவாதம், பயங்கரவாதம், இன்றும் மனிதத்தைக்
கொல்ல உலகே ஆஸ்விட்ச் முகாமாய் மாறிடும்
துன்பம், யுத்தங்களோ யதார்த்தம்

நாமே ஹிட்லர், நாமே துன்புறும் யூதர்,
நாமே தலைமைக் குருக்கள், நாமே பிலாத்து
மனிதநேயமோ சிலுவையில், காட்டிக் கொடுத்து
மறுதலிக்கும் சிறுமையோ நம் அறியாமை

நம்மை நாம் நாம் அறிந்தால்-
ஆணவ மனமழிய, நம்மில்
உயிர்த்தெழும் இயேசுவோ கிறிஸ்து

# *<u>Resurrection</u>*

*Reeds swaying in the wind have no shackles on their feet,*
*Only the artist hears the sound of the anklets.*
*Fish swimming in the sea have no boundaries,*
*The waves crashing on the shore are their stage.*

*For the cuckoos singing their melodies, and the peacocks dancing,*
*For the wind sculpting shapes in the clouds,*
*For the setting moon and the flowing waterfall,*
*The artist has no titles, garlands, or praises, and no worries in the heart.*

*For the setting moon, the cascading waterfall,*
*The colorful flowers blooming, the roaming sea,*
*And the blowing wind—the only essence is*
*Freedom, and a profound, unburdened greatness.*

*Nature is granted freedom by God,*
*Crossing race, religion, color, and language,*
*It is the mantra that sustains everyone,*
*A manifestation of love beyond knowledge.*

*Humanity, imprisoned by the arguments of race, religion, and language,*
*Unaware that the golden cage is a prison, ignorance is the chain,*
*Pride is the shackle, and ignorance is the suffering of unknowing poverty.*

*Religious fanaticism, racism, and terrorism poison the air of freedom,*
*Even today, transforming the world into an Auschwitz camp,*
*Suffering and wars are the reality.*

*We are the Hitlers, we are the suffering Jews,*
*We are the chief priests, we are Pilate,*
*Humanity is crucified, revealing and denying itself,*
*Our ignorance is the cause of this smallness.*

*If we truly know ourselves—*
*Pride will wash away, within us*
*Christ will resurrect.*

**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-20-06-2024

### Review of the Poem "Resurrection

#### **Theme and Content**

1. **Exploration of Freedom**:
   - The poem delves deeply into the concept of freedom, contrasting the boundless liberty found in nature with the constraints and sufferings imposed by human society. It reflects on the natural world's inherent freedom and the artificial boundaries created by human ignorance and pride.

2. **Nature as a Symbol of Freedom**:
   - The poet uses vivid imagery of reeds swaying in the wind, fish swimming in the sea, cuckoos singing, and peacocks dancing to symbolize unrestricted freedom. These natural elements are depicted as embodiments of pure, unbound existence, emphasizing the contrast with human-imposed limitations.

3. **Human Constraints**:
   - The poem critiques the various forms of societal imprisonment, including racial, religious, and linguistic divisions. It points out that these divisions lead to a metaphorical "golden cage," where ignorance and pride are the shackles that hinder true freedom.

4. **Historical and Contemporary References**:
   - By referencing Auschwitz and Hitler, the poem connects past atrocities to present-day fanaticism, racism, and terrorism, illustrating how these evils continue to poison the air of freedom. This historical context underscores the ongoing struggle for true liberation and the dire consequences of failing to overcome prejudice and hatred.

5. **Spiritual Enlightenment**:
   - The concluding verses suggest that true freedom comes from self-awareness and the shedding of pride. The poem posits that recognizing our shared humanity can lead to a spiritual awakening, symbolized by the resurrection of Jesus or Christ within us.

#### **Style and Language**

1. **Evocative Imagery**:
   - The poet employs rich, sensory language to create powerful images of nature and its inherent freedom. These images serve to both contrast and critique the artificial constraints of human society.

2. **Metaphorical Depth**:
   - The use of metaphors such as "golden cage," "poisoned air," and "crucified humanity" adds layers of meaning to the poem, making the abstract concepts of freedom and oppression more tangible and impactful.

3. **Contrasting Elements**:
   - The poem skillfully juxtaposes the boundless freedom of nature with the constraints and sufferings of human constructs. This contrast highlights the disparity between natural liberty and societal imprisonment.

4. **Rhythmic and Lyrical Quality**:
   - The poem’s rhythmic flow and lyrical quality enhance its emotional resonance. The language is both poetic and poignant, drawing readers into a contemplative state.

#### **Impact and Significance**

1. **Universal Appeal**:
   - The themes of freedom, self-awareness, and the critique of societal divisions have universal relevance. The poem speaks to fundamental human desires and the timeless struggle for true liberation.

2. **Emotional and Reflective Tone**:
   - The poem’s tone is both reflective and critical, encouraging readers to contemplate their own lives and the societal structures that impede true freedom. It evokes a sense of urgency and a call to action for personal and collective liberation.

3. **Philosophical and Spiritual Depth**:
   - The poem’s emphasis on self-awareness and spiritual enlightenment adds a profound philosophical dimension. It suggests that true freedom transcends physical and societal constraints, residing instead in the realm of the spirit and the mind.

#### **Conclusion**

"Resurrection is a deeply reflective and thought-provoking poem that explores the essence of freedom through the lens of nature and human society. With its rich imagery, metaphorical depth, and poignant critique of societal constraints, the poem invites readers to contemplate the true meaning of freedom and the steps needed to achieve it. By highlighting the contrast between natural liberty and human-imposed limitations, the poem serves as a powerful call for self-awareness, spiritual awakening, and the universal pursuit of liberation.

# வெண்ணிலா






உன் விழிகளுக்குள் நானும், என் விழிகளுக்குள்
நீயுமாய்-மாறாத குவியத்தூரத்தில் நிலைத்த
நம் விம்பம், காலங்கள் பல போனாலும்
அழியாத , கல்லில் வடித்த சிலையடி

என்னுள் துடிக்கும் இதயத்தில் நீயடி
உன்னுள் துடிக்கும் இதயத்தில் நானடி
நாமிருவரல்ல ஒருவரடி சொல்லும் செய்தி
காதல் உலகிற்கு நற்செய்தியடி

வெண்ணிலவாய் நீ, வெள்ளி பூத்த பொன்வானாய் நான்,
தென்றல் என்னைத் தழுவும் போதெல்லாம், உன்னைத்
தழுவும் இன்பம், வாச மலரை நுகரும்போதெல்லாம்
என் சுவாசத்திலோ உன் மேனி வீசும் சுகந்தம்

கண்ணுக்கு நிலவாகி, பிரியாத மழையாய்
மண்ணுக்கு உறவாகி என் நெஞ்சோடு கலந்த
உன்தன் காதல் உறவு, காலத்தால் அழியாததடி
படிக்கும்தோறும் கவிதையின் இன்பமடி

நொடிக்குள் நூறு தடவை உன்னை
நினைத்துப் பார்க்கிறேன்-நெஞ்சுக்குள்
தேன்மழை, கருவானிலே வெண்ணிலா
என் காதல் வானிலே பெண்ணிலா



உண்டால் இனிக்கும் மாங்கனி. உண்ணாமலே
நெஞ்சுக்குள் இனிக்கும் கன்னியோ தேன் கனி,
கேட்டாள் இனிக்கும் ஆண்டாள் பாசுரம் -உன்னைக்
கண்டால் மனதில் ஒலிக்கும் காதல் பாசுரம்

வண்ணமலரை மொய்க்கும் வண்டின் ரிங்காரம்
வாசமலரே உன்னை எண்ணும்போதே என்னுள் ஆயிரம்
காதல் பாசுரம், சூடிக்கொடுத்த ஆண்டாளே
என்னை சூடிக்கொள்ள மனதிலே ஆனந்த நாதஸ்வரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17-07-2024*